# பறத்தல் அதன் சுதந்திரம்

நெய்வேலிக் கவிஞர்களின் கவிதைகள்



ராசி பதிப்பகம்

நெய்வேலிக் கவிஞர்களின்

# பறத்தல்-அதன் சுதந்திரம்

தொகுப்பும் பதிப்பும்

**தாய்.ராசி. ஜெகதீஸ்வரன்**

ராசி பதிப்பகம்
203/1, ராசி வளாகம்,
எம்.ஆர்.கே சாலை, இந்திராநகர், நெய்வேலி-1.

# பறத்தல்-அதன் சுதந்திரம்

நெய்வேலிக் கவிஞர்களின் கவிதைகள்

நெய்வேலிப் புத்தகக் கண்காட்சி-2008 சிறப்பு வெளியீடு

விலை 40/-

பறத்தல் அதன் சுதந்திரம் ❖ கவிதைகள் ❖ © தொகுப்பாசிரியருக்கு ❖ முதல் பதிப்பு : ஜூலை 2008 ❖ பக்கங்கள்-64, ❖ வெளியீடு : ராசி பதிப்பகம், 203/1, ராசி வளாகம், எம்.ஆர்.கே சாலை, இந்திராநகர், நெய்வேலி-1. ❖ நூல் வடிவமைப்பு கு. பிரேமலதா

## அணிந்துரை

**சொ. செந்தமிழ்ச்செல்வன்,**
முதன்மைப் பொதுமேலாளர்,
நகர நிர்வாகம், என்.எல்.சி.

'ஆல் அமர்வித்தின் அருங்குறளாவான்' என்று வாமன அவதாரத்தின் ஆற்றல் குறித்து கம்பராமாயணத்தில் கம்பன் பேசுவான். மிக நுண்ணிய ஆலம்வித்தில் வருங்காலத்தில் பெரும் விருட்சமாகும் ஆற்றல் நுண்ணிய வடிவில் உள்ளுறைந்து கிடப்பதைப் போலவே பிற்காலத்தில் வெளிப்படவிருக்கும் பேராற்றல் மாணாக்கர்களிடமும், இளைஞர்களிடமும் படர்ந்து கிடக்கின்றன. இத்தகைய உணர்வுதான் இக்கவித்தொகுப்பை நுகரும்போது உணர முடிந்தது.

ஒவ்வொரு கவிதையிலும் அப்படைப்பாளியின் ஆற்றல் தெள்ளெனப் புலனாகிறது. களத்திற்காக ஏங்கிய உள்ளம், நெய்வேலிப் புத்தகக் கண்காட்சி அமைத்த களத்தில், களம்கண்ட வேங்கையாகச் சீறிப்பாய்ந்துள்ளது.

'புத்தகங்கள் விற்கும் சந்தையாக மட்டும் புத்தகக் கண்காட்சி அமைந்து விடக் கூடாது; அது படைப்பாளிகளை ஊக்குவிக்கும் களமாக, இளைஞர்களை நல்வழிப்படுத்தும் புலமாக, அவர்கள் திறனை வெளிப்படுத்தும் நிலமாக அமைய வேண்டும்' என்ற நோக்கினை குறிக்கோளாகக் கொண்டு அமைந்ததுதான் இந்த நெய்வேலிப் புத்தகக் கண்காட்சி. அந்நோக்கம் சில விழுக்காடுகளாவது நிறைவேறியுள்ளது என்பதனைத் திண்ணமாக சான்றுரைப்பதுதான் இந்த கவிதைத் தொகுப்பு.

ஒவ்வொரு கவிதையும் அருமை. அருமையிலும் அருமை வெளிப்படுத்தும் சமூகப்பொறுப்புணர்வு. கடந்த காலங்களைப் போலல்லாமல் இன்றைய இளைஞர்கள் சமூக நோக்குள்ளவர் என்பதனை அவை வெளிக்கொணர்கின்றன. சான்றுக்கு கீழே சில:

* *"சுதந்திரத் திருநாள்! கொடியேற்றிய தலைவரைக்*
*குறிபார்த்தது துப்பாக்கி! வேண்டாம் வேண்டாம்*
*வன்முறை வேண்டாம்! படபடத்தது தேசியக்கொடி!*
*விளைவு? இப்போது அது அரைக்கம்பத்தில அழுதபடி!"*

* *"நீர்கோத்த ஈரவிழிகளின் வழியே கசிகிறது*
*உன் வார்த்தைகள் சப்தமின்றி - கிழிந்த சட்டையைப்*
*பழைய நூலில் தைத்து வெளித்தெரியாமல்*
*மூட முயல்கிறாய் உன் வறுமையை"*

* *ஊர் முழுக்க இன்னும் முழங்கிக் கொண்டுதானிருக்கிறது*
*வீரம் பூசிய பேச்சுகள்; நரம்புகளை முறுக்கி,*
*இரத்தத்தைச் சூடேற்றும் வார்த்தைகள் அதில் நிறைய இருக்கும்.*
*அப்படிதான் உன் பாட்டன் அதைக் கேட்டுப் பித்தம்*
*தலையேறி, அன்று கத்தியைக் கையில் எடுத்தான்.*
*அறுத்த தலை எரிப்பதற்குள்ளேயே*
*அவர் தலையும் மண்ணில் உருண்டது"*

இக்கவிதைத் தொகுப்பு இக்கண்காட்சியில் ஒரு முத்தாய்ப்புதான்; சந்தேகமேயில்லை, நெய்வேலிப் புத்தகக் கண்காட்சியில் அறிமுகமான எழுத்தாளர் பலர் இன்று நாடு போற்றும் நல்படைப்புகளை நல்குபவர்கள். அவர்களை ஊரே போற்றுகிறது. அவர்தம் வழியில் இக்கவிஞர்களும் விரைவில் கலப்பார்கள் என்பதனை இத்தொகுப்பைச் சுவைக்கும்போது அறியமுடிகிறது.

இத்தகைய சிறந்த கவிதைபடைத்த படைப்பாளிகளை உளமாரப் பாராட்டுகிறோம். இக்கவிதைத் தொகுப்பினை நூல்வடிவமைத்த கவிஞர். கு. பிரேமலதா மற்றும் இதனைத் தொகுத்துப்பதிப்பித்த தாயத் தொண்டு மையத்தின் நிறுவனர், சமூக சேவகர், பொதுநல ஆர்வலர், திருமிகு. தாய்.ராசி. ஜெகதீஸ்வரன் ஆகியோர் பாராட்டுக்குரியவர்கள். அவர்களை மனமாரப் பாராட்டுகிறோம். நெய்வேலிப் படைப்பாளர்களின் படைப்புகள் இன்னும் மெருகேறி இத்தமிழ் நல்லுலகம் விரைவில் பாராட்ட எமது வாழ்த்துக்கள் என்றென்றும்.

பதிப்புரை

# கவிதை என்பதே கிளர்ச்சிதான்

-தாய்.ராசி. ஜெகதீஸ்வரன்

பணி முடித்துத் திரும்பிய சூரியன் ஓய்வு கொள்கிறான். வானம் எனும் விளையாட்டு மைதானத்தில் நட்சத்திரச் சிறுவர்கள் விளையாடத் துவங்கிவிட்டார்கள். மலைகளில் இருந்து பூக்களின் நறுமணத்தைக் கவர்ந்து கொண்டோடி வருகிறது அருவி. நதியாய் ஓடி, நதிகளாய் ஓடி, கடலில் விழும் நீர்.

நெய்வேலிக் கவிஞர்களின் கவிதைகள் வண்ணவண்ணப் பூக்களைப் போல இருக்கின்றன. விதவிதமான நட்சத்திரங்களைப் போலவும் தான்.

இந்தத் தொகுப்பு ஆகச்சிறந்தக் கவிதைகளை உள்ளடக்கியத் தொகுப்பு என்று சொல்லிவிட முடியாததாக இருப்பினும், சில, சிறந்த கவிதைகளைக் கொண்டதாக இருக்கிறது என்பது நிஜம்.

கவிதை என்பதே கிளர்ச்சிதான் என்பார் பாப்லோ நெருடா. உண்மைதான். உலகப் புரட்சியின் வரலாற்றுச் சுவடுகளைக் கொஞ்சம் புரட்டிப்பார்த்தால், பேனாவின் முனையிலிருந்துப் புறப்பட்ட வார்த்தைகள் எத்தனை சாம்ராஜ்ஜியங்களைப் புரட்டிப் போட்டிருக்கிறது என்பது புரியும்.

எமக்குத் தொழில் கவிதை என முழங்கிய பாரதியின் கவிதைகள் சுதந்திர வேள்விக்கு நெய் ஊற்றியது நாம் அறிந்த வரலாறுதான்.

கவிதை இப்படி எத்தனையோ கிளர்ச்சிகளை உருவாக்கியிருக்கிறது. உருவாக்கிக் கொண்டும் இருக்கிறது. வார்த்தைகளுக்கு உயிர் ஏற்றும் வித்தையைத் தெரிந்தவன் கவிஞன்.

இந்த தொகுப்பில் என்னைக் கவர்ந்த சில வரிகள்,

*கணக்கில் புலி*
*எண்ண முடியவில்லை*
*நட்சத்திரம்*

-சாமுவேல்

எனும் வரிகளின் உட்பொருள் ரசிப்பிற்குரியது.

*உரத்தக் குரலில்*
*புகழ்பேசி*
*கிசுகிசுப்பாய்*
*புறம்கூறி*
*செத்துப் போனவனுக்கும்*
*சினேகம் மறுப்பார்கள்*

-சாந்தி பாஸ்கரன்

இந்த வரிகள், மனிதத்தின் மரணத்தை சுட்டிக் காட்டி நம்மை சூடேற்றுகிறது.

*வாழ்ந்த அனுபவம்*
*தாழ்ந்து போனதைப் பற்றியே*
*அதிகம் பேசுகிறது*

- க. மாரியப்பன்

எனும் வரிகள், நாம் அன்றாடம் சந்திக்கும் மனிதர்களின் முகங்களைப் படம் பிடிக்கிறது.

கவிஞர்களின் வாசிப்புத் தன்மையும் கவிதைப் பற்றியப் புரிதலும், இன்னும் கொஞ்சம் கூடுதலாக இருந்தால், அடுத்த கவிதைத் தொகுப்பு இன்னும் சிறப்பாக அமையும் என்று நம்பலாம்.

நெய்வேலிக் கவிஞர்களின் கவிதைகளைத் தொகுத்துப் பதிப்பிக்கும் வாய்ப்பை வழங்கிய நெய்வேலிப் புத்தகக் கண்காட்சியின் பொறுப்பாளர்களுக்கு எனது நன்றி. அணிந்துரை வழங்கிச் சிறப்பித்த திரு. சொ. செந்தமிழ்ச் செல்வன் (முதன்மைப் பொதுமேலாளர்) அவர்களுக்கும் எனது பெருமதிப்பிற்குரிய முதல்வர் முனைவர் மருதூர் அரங்கராசன் அவர்களுக்கும், வேர்கள் இராமலிங்கம் அவர்களுக்கும் நன்றி. நூலாக்கப் பணியில் உதவிய கவிஞர் நிலா அவர்களுக்கும் ராசி பதிப்பகத்தின் வடிவமைப்பாளர் கவிஞர் கு. பிரேமலதாவுக்கும் நன்றி.

# உள்ளே....

## சுதந்திர தாகம்

எங்களைப் பார்த்து அரை
நிர்வாணமாக வந்த காந்தியின்
மானம் போகக் கூடாது
என்பதால்தான் நாங்கள்
இன்னும் முழு நிர்வாணமாக
வெளியில் வரவில்லை.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு
மட்டும் உணவுப் பொட்டலங்களை
வழங்கினால் போதாது-இனி
விலைவாசி உயர்வினால்
பாதிக்கப்பட்டவர்களுக்கும் அது
வழங்கப்பட்டாக வேண்டும்.

தமிழில் காந்தி போட்ட கையெழுத்து
அருங்காட்சியகத்தில் வைக்கப்படுகிறது.
தமிழை அருங்காட்சியகத்தில்
வைக்காமல் இருந்தால் சரி.

அந்நியன் ஆட்சியில்
சுதந்திரமாக நடமாடினாய்-இந்த
இந்தியனின் ஆட்சியில்தான்
தந்திரமாக கொல்லப்பட்டாய்-இது
மகாத்மாக் காந்தியின்
மரணத்தின் வாக்குமூலம்.

இரவில் பெண்கள் தனியாக
நடமாடும் நாள்தான் உண்மையான
சுதந்திர நாள்
பகலில்கூட அவர்களால்
நடமாட முடியவில்லை.

*சாமுவேல்*

## வைகை—2008

✹ பள்ளிக் குழந்தைகளுக்கு
விடுதலை
சுதந்திர தினம்!

✹ படகுக்கார்
மிதந்து சென்றது
மழை வெள்ளம்!

✹ விரைவு வண்டி
வேகத்தைக் குறைத்தது
எருமை மாடு!

✹ உயிர்த்தார் ஏசுகிறிஸ்து
மரித்தன
ஆடுகள்!

✹ உண்மை விலைபோகும்பொழுதும்
சிரிக்கிறார்
காந்தி!

✹ நெருப்புக் காற்றில்
விறகு பொறுக்குகிறாள்
ஏழைச் சிறுமி!

✹ கணக்கில் புலி
எண்ண முடியவில்லை
நட்சத்திரம்!

✹ பேருந்து தள்ளாடியது
குடிபோதையில்
ஓட்டுநர்!

✹ பேருந்தில் இடமில்லை
இடம் பிடித்தது
கைக்குட்டை!

*க. சாந்தகுமாரி*

## பதிவு

புதுமனை புகுவிழா நிகழ்வு
நண்பர்களும் உறவினர்களும்
காலை உணவருந்தி
மொய் எழுதி வாழ்த்தினார்கள்.
மகிழ்ச்சி எங்கும் வியாபித்திருக்க
யாகப் புகையினூடே
புகைப்படமும் எடுத்துக்கொண்டார்கள்.,
பிறகு
ஆல்பத்தைப் பார்த்த போது
மனம் வலித்தது.
யாருடனும் படம் எடுத்துக் கொள்ளாமல்
எங்கள் வீட்டுத்
திருஷ்டிப் பொம்மை.

*எல். தமிழ்மொழி*

## நாள் வருமா! அந்த நாள்வருமா!!

சேயாக நானும்
செய்வதறியாத் தாயின்மடியில்
தலைவைத்து உறங்கிய
நாள்வருமா! அந்த நாள் வருமா!!

நிலவினைக் காட்டி
உணவினை ஊட்டி
நித்தம்! நித்தம்!
பித்தாய் வளர்த்த
நாள்வருமா! அந்த நாள்வருமா!

துள்ளித் திரிந்த
கிள்ளைப் பருவத்தில்
அள்ளி அணைத்து
மெல்லவே சினந்திட்ட
நாள்வருமா! அந்த நாள் வருமா!!

மழையினில் நனைந்த
போதினில் என்னை
முந்தானை கொண்டு
தலையினைத் துவட்டிய
நாள்வருமா! அந்த நாள்வருமா!!

நாட்டத்தை அறிந்து
வாட்டத்தைப் போக்கி
கேட்டதைக் கொடுத்து
ஊட்டத்தைத் தந்த
நாள்வருமா! அந்தநாள் வருமா!!

நோயினைப் போக்க
நோன்பு இருந்தே
ஆயுளைத் தந்த
தாயின் அன்பின்
நாள்வருமா! அந்தநாள் வருமா!!

அழுதிட்ட போது
தொழுதிட்டே என்னை
தழுவிட்ட தாயின்
எழுந்திட்ட பாசத்தின்
நாள்வருமா! அந்தநாள் வருமா!!

நல்லவை சேர்க்க
அல்லவை போக்க
சொல்லிய கதைகள்
மெல்லவே ஒலித்திடும்
நாள்வருமா! அந்தநாள் வருமா!!

இன்று என் தாயிடம்
நானில்லை என்றுமே
தாயுடன் வாழ்ந்திடும்
நாள்வருமா! அந்தநாள் வருமா!!

*இராம. பாரதி*

## மறக்க முடியாதவை

பால்ய பருவத்தில் பாசத் தங்கையை
பலவும் சொல்லி பயம் காட்டியதை
வீட்டில் சேர்த்த உண்டியல் சேமிப்பை
விடலைகளுடன் வீண் செலவு செய்தசெயலை
அதிகாலைப் படிப்பு அறிவைப் பெருக்குமென
அன்னையின் சொல்லை அசட்டைச் செய்ததை
களத்த மேட்டுக் காவலுக்குப் போகச் சொன்னால்
கடுஞ் காச்சலென கவிழ்ந்து படுத்ததை
கண்ணிய மில்லா அரசியல் வாதிகளால்
கண்ணான சுதந்திரம் களவு செய்வதை
தொல்லைக் கொடுக்கும் மத வாதிகளால்
தொடர்பே இல்லா மக்கள் மடிவதை
வேளாண் சகோதரிகள் விலையில்லா உயிரை
வெண்தனலில் எரித்த பாதகர்கள் படுஞ்செயலை
தொன்னத்தியொரு குடந்தை குழந்தைகளை
தீயிலிட்டு தின்ற காலன் கெடுஞ்செயலை
அமைதியான ஆழ்கடல் ஆழிப்பேரலையாய்
அன்பு மக்களை அழித்துச் சென்றதை
மணம்வீசிய காற்று! மதம் கொண்டு வந்து
மக்கள் மகிழ்ச்சியை மடித்துச் சென்றதை
அன்னைத் தமிழனின் அன்புச் சகோதரர்கள்
அடிப்பட்டு ஈழத்தில் அழிந்து வருவதை
அனைத்தையும் நான் மறக்க நினைத்தும்
என்னால் மறக்க முடியாதவை.

*விமலா பாரதி*

## தாய்மை

கருவுற்று களிப்புக் கொண்டு
காத்திருந்தாள் என்வரவை
தலைத்திரும்பி தரைநோக்கி
தவழவிட்டாள் என்னுயிரை

மயங்கி தெளிந்தபின்
மார்போடு சேர்த்தணைத்தாள்
உதிரத்தைப் பாலாக்கி
உயிர்க்காப்பு அளித்திட்டாள்

தளிர்விரல் பிடித்து
தடையில்லா நடைப்பழகி
தமிழோடு வளர்த்துஎனை
தரணியிலே உலவவிட்டாள்

வாழ்வை வளமாக்கி
வையத்துள் வாழவைத்தாள்
வளமானயென் அன்னைக்கு
வந்ததுவே பக்கவாதம்

அமுதூட்டிய அன்னைக்கு
அண்ணமூட்டி சேவைசெய்து
சேயான அவளுக்கு
தாயாக இன்றுநான்

ஈன்ற பொழுதின்
பெரிதுவந்தாள் என்னன்னை
தரணிகாத்திட வேண்டும்
தாய்மைபோற்றிட வேண்டும்.

### இரா. மணிமேகலை ராதாகிருஷ்ணன்

## மூங்கில் ரோஜாக்கள்

நாட்டினில்
புதிய சட்டங்கள்
எத்தனை பிறப்பினும்
பெண்அடிமை ஓய்ந்திடவில்லை - ஆண்
பெண்சமத்துவம் மலர்ந்திடவில்லை!
இன்னும்
வரதட்சணைக் கொடுமை
பெண்சிசுக் கொலை
அத்தனையும் உண்டு கண்ணே! - இந்த
அடிமைத்தனத்தை ஒழிக்கணும் பெண்ணே!

ஆண் அல்ல
பெண் என்று
தெரிந்துவிட்டால்
கருவறையில் அவசர வெளியேற்றம்
அதிக சதவிகிதம் பெற்றுவிட்டால்
மட்டும்
மாறுமோ பெண்குழந்தை ஒழிப்பு!
ஆட்டிவைக்கும் சாதகமும்
உறவினில் திருமணமும்
கண்ணில் முள் வைத்துத் தைப்பு!

ஆணுக்குச் சமமாய்க்
கல்வி தந்திட
மயங்கும் மனிதம் - சிலர்
இவளுக்குக்
கல்வியறிவினில் செலவுகள் மிச்சம்
கற்காவிட்டாலும் செலவுகள் மீதம் -பலர்
படிப்பினில் ஏனிந்த பேதம்!
இங்கேயும்
வரதட்சணை செய்திட்ட துரோகம்!

காலமெல்லாம் காக்கும்
'கல்'லானாலும் கணவன்
காலால் உதைத்த மணமுறிவு மடமைகள்
பெண்
வாழ்க்கை-
சூழலில் சிக்கிய படகா-இல்லை
வாழ்வு-
அடக்குமுறைக்கு ஆளாவதா!
பெண்ணுக்குப்
புத்திமட்டும் மிக்கிருந்தால்
பழமை மறையும்...
புதுமை தோன்றும்!!!

*தா்மசம்வா்த்தினி*

## அரைக்கம்பத்தில் கொடி

சுதந்திரத் திருநாள்!
கொடியேற்றிய தலைவரைக்
குறிபார்த்தது துப்பாக்கி!
வேண்டாம் வேண்டாம்
வன்முறை வேண்டாம்!
படபடத்தது தேசியக்கொடி!
விளைவு?
இப்போது அது அரைக்கம்பத்தில்
அழுதபடி!

## 'வெள்ளை' இந்தியன்

வெள்ளையனே வெளியேறு
என்றோம்! வெளியேறினார்!
கல்வியையும் வெள்ளைக்
கலாச்சாரத்தையும்
விதைத்துவிட்டு!
மனத்தளவில் இந்தியரை
வெள்ளையராய் மாற்றிவிட்டு!
வெள்ளை மனம் கொண்டவன் இந்தியன்!
சரிதான்!

சேது அருங்கரை

## வீர இளைஞனே!

வீர இளைஞனே! போராடு;
வெற்றி ஓடையில் நீராடு.

அன்பின் சின்னம் நம்நாடு;
அமைதிப் பூங்கா எனப்பாடு.
"பிறப்பு ஒக்கும்"-பொதுமறையைப்
போற்றிப் பாடிக் கொண்டாடு

சாதி மதவெறிச் சாத்தானைச்
சாட்டை எடுத்து நீ சாடு.
போதி மரத்தான் போதனையைப்
பாட்டாய் வடித்து நீ பாடு.

வீர இளைஞனே! போராடு;
வெற்றி ஓடையில் நீராடு.

ஆண்பெண் சரிநிகர் எனப்பாடு;
ஆலயம் ஆகும் உன்வீடு.
பெண்மனம் நோகப் பெருநாடு(ம்)
பிற்பகல் ஆகும். மண்மேடு.

மீசைக் கவிஞன் கூப்பாடு
மேடைகள் தோறும் நீ போடு.
புதுவழி படைத்தது ஈரோடு;
பெண்தளை உடைத்திடப் போராடு.

*சாந்தி பாஸ்கரன்*

## ஞானப் பிரதேசம்

வழக்கொழிந்த
இறந்த காலங்களில்
சொந்தங்களின் கதவு தட்டித்
தோட்டிகள் சொல்வார்கள்
இழவுச் செய்தி

நிகழ்கால ஆட்டோக்களில்
அறிவித்துப் போகிறார்கள்
கணீர்க் குரலில்
கண்ணீர் அஞ்சலி

எவர் வீட்டிலோ நிகழும்
எவருடைய புறப்பாட்டுக்கும்
கூட்டமாய்ச் சூழ்ந்து விடுகிறது
சுற்றமும் நட்பும்

எப்படி நிகழ்ந்தது
என்பதாய்த் தொடங்கி
சுற்றி வளைத்து
வந்து சேர்வார்கள்
அவர் அவர் பிரச்சினைகளில்

இருப்பைக் குறித்துச் சிலரும்
இழப்பைக் குறித்துச் சிலரும்
இறுகிய முகத்தோடு
கவலையும் கணக்குமாய்
அலைந்து கொண்டிருப்பார்கள்

சாராயம் குடிக்கக்
காசுகொடுத்தவர்களின்
தலை முறைகளைப் பாடித்
தப்படிப்பவர்களின் புண்ணியத்தில்
உரத்த குரலில்
புகழ் பேசிக்
கிசு கிசுப்பாய்ப்
புறம் கூறிச்
செத்துப் போனவனுக்கும்
சிநேகம் மறுப்பார்கள்

ஒப்பாரி இரைச்சல்களில்
யாருக்குமே கேட்காது
துக்கத்தின் விம்மல்கள்

சாவின் அர்த்தங்களைச்
சகலரும் சொல்லிச் செல்வார்கள்
செத்தவனைப்
புதைக்கவோ எரிக்கவோ எடுத்துக் கொண்டு

இன்று நீ
நாளை நான் எனச்
சமாதானத்தில் சமன்பட்டு
மறந்து போவார்கள்
இப்படியே
ஒவ்வொரு மரணத்தையும்.

*ரிஷி பாரதி*

## பாமரனின் பயணக்குறிப்பு

வென்று வரவோ
கொண்டு வரவோ அல்லாது
வெறும் சென்று வர மாத்திரமே
பயணப்படுகிறேன்
என் எல்லாப் பயணங்களிலும்

ஆட்கள் அதிகமாக இருந்தாலும்
ஆட்களின்றி இருந்தாலும்
பயணங்கள்
வெறிச்சோடிப் போகின்றன
நீண்ட சாலைகளாக

வண்டி கிளம்பும் வரை
வியாபாரமாகிக் கொண்டிருக்கிறது
கைக்குட்டை, இஞ்சிமரப்பா
வாட்டர் பாக்கட்
கம்யூனிசம்
ஜனநாயகம்

இருக்கையின்
சுகம் குறித்த கவலைகளையும்
தகராறுகளையும்
ஏற்றிக்கொண்டே
ஓடத் தொடங்குகிறது
ஒவ்வொரு பேருந்தும்

வாகனங்கள் எதுவென்றாலும்
எப்போதும் ஜன்னலுக்கு வெளியே
எதிர் வினையில்தான் நகருகிறது
இயற்கைக் காட்சிகளும்

சின்னத்திரையில் சினிமா பார்க்கும்
ரசிகை முதல்
முன் இருக்கையில்
நின்றபடி திரும்பி சிரிக்கும்
குழந்தைகள் வரை
அத்தனையும் அழகாத்தானிருக்கிறது

ரசனைக்கும் இம்சைக்கும் இடையில்
மனசு அல்லாடினாலும்
வயல் வெளிகளில்
நின்றபடி தூங்கும்
நொள்ள மடையான்களைப்
பார்த்துப் பார்க்காமல்
செல்ல முடிவதேயில்லை

சீட்டில் எழுதிய
சில்லறைகளில் கவனமாயிருக்க
இத்தனையும்
பதியாமல் போனதுண்டு
நிறைய நேரங்களில்

பயணம் தவறாமல்
தார்ச்சாலைகளில்
ரத்தம் சிதறிச்
செத்துக்கிடக்கும்
நாய்களும்
மனிதர்களும்
மனசுக்குள் நெருக்கியடித்துக்கொண்டு
பயணம் செய்ய..,

அநேக முறை
சொந்தமில்லாத சுமைகளோடு
சோர்வாகத்தான்
ஊர் போய்ச் சேர வேண்டியிருக்கிறது.

*K. வசந்தா ராதாகிருஷ்ணன்*

## உள்ளுக்குள் உடையும் சிற்பம்!

அதோ பார்!
சிதையாத சிற்பம் ஒன்று
உள்ளுக்குள் உடைந்து உடைந்து
தனக்குள் புதையாமல்
புதைந்து கொண்டிருப்பதைப் பார்!

மகளிருக்கு
மறுமணம் செய்து வைப்பது
சாதி வழக்கமில்லையென்ற
சகதி வார்த்தை வேண்டாம்!
விதவையின் உழைப்பில்
வேண்டியதை வாங்கிக்கொள்ள
பாசமென்ற வேஷம் பூச வேண்டாம்!

படர்ந்து கொள்ள
பாலகர் என்ற கொம்பு இருப்பின்
படர்ந்து கொள்ளட்டும்!
பாதகமில்லை!
பசியும் தாகமும்
பல் போனவனுக்கும் உண்டு!
படுக்கையில் கிடப்பவனுக்கும் உண்டு!

மணம் முடித்தவன்
மரணம் அடைந்த பின்பு
மகவு ஏதுமின்றி
மருகி மருகி உருகும்
மகளிரின் நிலை உணர்!
மறுப்பார்கள்! மறுத்து விடு!
மறுமணம் செய்து வை!
மனிதன் என்ற சொல்லுக்கு
மனமும் மனசாட்சியும் இயங்கட்டும்!

## நீ அறியாத ஒரு செய்தி

ஒரு கோடென ஒழுகி
ஏழெட்டுச் சொட்டுகள் விழுந்து
தலையணையை உப்பாக்கியிருக்கும்
என் கண்ணீரை அறிவாயா

கோடையின் திடீர்மழை
போல்தான்
உன் காதலும்
காமமும்

உன்னைக் காணும்
ஒவ்வொரு கணமும்
புறாவின் தத்தளிப்பென
இருப்பதா பறப்பதா
என்பதாகவே கழிகிறது பொழுது.

நெய்வேலி பாரதிக்குமார்

## உறங்குபவனின் கனவு

வரவுக்கு மிஞ்சிய செலவு
கையைக் கடிக்கையில்
காலில் இடறிய வெற்றுப் பொட்டலத்தில்
கற்றை கற்றையாய்ப்
பணம் கிடப்பதாகப் பரபரக்கிறது
விழித்திருப்பவனின் கனவு...

சுட்டெரிக்கும் கத்தரி வெயிலில்
தார்ச் சாலையில் நடந்து களைக்கும்போது
குளிர்சாதனத்தின் அளவினையேற்றி
எவரையும் பொருட்படுத்தாமல்
உயர்ரகக் காரில் பறப்பதாகச்
சுகம் கொள்கிறது விழித்திருப்பவனின் கனவு...

நாளும் ஏறும் தங்கம் விலையைச்
செய்திகளில் வாசிக்கும் தொலைக்காட்சிப் பெண்
போர்த்தியிருக்கும் நகைகள்
ஒவ்வொன்றாய் மகளுக்குப்
பூட்டிப்பார்க்கிறது விழித்திருப்பவனின் கனவு...

என்றோ கன்னத்தில் முத்தமிட்ட
குழந்தையின் எச்சிலை
அனிச்சையாகத் துடைக்கிறது
உறங்குபவனின் கனவு...

என்றோ புல்வெளியில் நடக்கையில்
மேலே பட்டுச்சென்ற காற்றில்
இனம் தெரியாத பூவின் வாசத்தை
இன்று நுகர்கிறது உறங்குபவனின் கனவு...

எப்பொழுதோ இறந்துபோன தாத்தாவோடு
எந்த ஆச்சர்யமுமில்லாமல்
உரையாடுகிறது உறங்குபவனின் கனவு...

விழித்திருந்து, விழித்திருந்து
கண்ட கனவுகளில் எல்லாம்
பேராசைகள் நிரம்பி வழிகின்றன..
போதும்..
நிம்மதியாய் உறங்கவிடுங்கள்
ஆசைகளற்ற கனவொன்று காணவேண்டும்...

*ஆரு. மணிகண்டன்.*

## சற்று வெளியே வாருங்கள்!

ஏ! தூக்கம் தொலைத்த
துக்க மனிதர்களே!

கனவுகளோடும், நினைவுகளோடும்
நித்திரையில் கிடந்தது போதும்!
இதயங்களைத் திறந்து பாருங்கள்.

கடிகாரத்தின் காலப்பிடிக்குள்
வெற்றி என்னும் மாய வெளிச்சத்திற்காய்க்
குருடர்களாயிருந்தது போதும்!

எந்திரத்தோடு, எந்திரமாகி
இன்பம் தொலைத்த மனிதர்களே!
சற்று வெளியே வாருங்கள்
இன்னுமோர் உலகம் காத்துக் கிடக்கிறது
விழியைத் திறந்து பாருங்கள்!
விரிந்து கிடக்கும் அகில அழகை
அறிந்து கொள்ள முயலுங்கள்!

புல்லின் நுனியில்
பூத்திருக்கும் பனித்துளி!
வெள்ளியை உருக்கி ஓடவிட்டாற் போல்
வீழும் அருவிகள்!
சலசலக்கும் சத்தத்தோடு
கரையோடு கதைபேசும் நதிகள்!

அளவிட இயலா ஆழம்
அள்ள முடியாத அரிய பொருட்கள்
கடல்-கரையை
ஓயாமல் முத்தமிடும் அலைகள்!

மொட்டு எனும் கன்னி-தென்றலின் வருடலால்
தேனிலவு கண்டு-மணமாகி மலராகி,
பேசும் மௌன மொழி கேளீர்!
பசேலென்று இலைகள்
காற்றோடு பாடும் கானம் கேளீர்!

இயற்கையெனும் இன்பந்தொலைத்து
எந்திரமாய் வாழும் மனிதர்களே
சற்று வெளியே வாருங்கள்!
இயற்கையோடு இணைந்திருங்கள்
இன்பமாய் வாழுங்கள்!

பரியான்

## "குப்பை"

குப்பையைக் கூட
வகைப்படுத்தி வண்ணம் தீட்டி
மக்கும் என்றும் மக்காதென்றும்
மேம்பாடு செய்தார்!

குப்பை கூட்டும் நாங்களோ
மக்கும் குப்பை மட்டுமாய்
மக்கி மடிந்து மரணித்த கூட்டமாய்
ஒதுக்கித் தள்ளி ஓரமாய் வைத்தார்!

பிணக் காட்டில் கூட
எல்லோருக்கும் இடுபங்கு வைத்தபின்
சீயென வீசும் சில்லறை பொறுக்க
கைமண் அப்பிக் கால்முட்டி உடைந்து
கரணம் போடும் காரணம் தானோ?

பேர்கள் மாறிப் பெயர்ப்பலகை மாறி
ஊர்கள் மாறி உலகமே மாறி
ஆனால் என்ன?

வேர்கள் விரவி விழுதுகள் தாங்கும்
ஆலம் இலைகள் காற்றில் அலைந்ததோ?
கூட்டித் தள்ளும் குப்பை என்றானதோ?
அதுவும் விழுந்து சேற்றில் உளைந்ததோ?
பரம்பரைச்சங்கிலி
மாட்டுத் தொழுவமே நிரந்தரம் ஆனதோ?

மேத்தாவாணன்

**நேசம்...?!**

* ஒன்றரை வயதுப்
  பேத்தியைக் கூட...
  கொண்டு வந்து காட்டாமல்
  இரண்டரை ஆண்டுகளாய்
  ஈமெயில் நலம் விசாரிக்கும்...

* தன்-
  ஒரேமகளை எண்ணியெண்ணி...
  இருமலுடன் விழி நீர்க்கசியும்
  அம்மாவின் நச்சரிப்பு தாளாமல்
  ஆறுகடந்து எட்டுமைல் தாண்டி
  விட்டுவிட்டு வந்த பூனை

* பேருந்து பிடித்து
  அப்பா...
  வீடு திரும்பு முன்
  அம்மாவின் மடியில்... .?!

*க. மாரியப்பன்*

## நடப்பு

புலம்பியே கழிகிறது காலம்,
புழுதிபடிந்து கிடக்கிறது
பழம் நினைவுகள்
ஊர்தாண்டிச் செல்கிறது உறவுகள்
ஊமையாய் அழுகிறது ஊர்;

நிறமாறிக் கிடக்கிறது
ஆற்றுப் படுகைகள்;
நிறைமாதக் கர்ப்பிணியாய்
திமிறுகிறது மனது;
குறைகளின் கூட்டமே செய்திகளாய்ச்
சேர்ந்து கிடப்பதால்
நிறைகள் சிதறிக்கிடக்கின்றன.

வாழ்த்துப் பாடல்கள்
ஒப்பாரிகளாய் உருமாறிவிட்டன
வாழ்ந்த அனுபவம்
தாழ்ந்து போனதைப் பற்றியே
அதிகம் பேசுகிறது;

நேசிப்பு இல்லாத வாசிப்புகளால்
கவிதை கதைப் புத்தகங்கள்
காலம் கடத்தும் கருவியாகிவிட்டன

ஓட்டை விழுந்த பாய்மரக்கப்பலில்
காற்றின் திசை அறியமுடியவில்லை
தட்டையாய்ப் போன மனதில்
திட்டங்களால் தீரப் பள்ளங்கள்
முட்டல்களும் குமட்டல்களுமே
தினசரி வாழ்க்கை

மனசு தீர்வுகள் இல்லாத
திசையில் தேசாந்திரப் பயணம்
எல்லாம் நீர்த்துப்போன வாழ்க்கையில்
மனதின் மூலையில்,
உண்மை,
கண்ணில் வீழ்ந்த தூசியாய்
உறுத்திக் கொண்டே இருக்கிறது.

*உ.திருஞானம்*

## கனவு காணக் கற்றுக் கொண்டோம்!

இராமேசுவரத்திலிருந்து
இராஷ்டிரபதிபவனுக்கு-ஓர் பயணம்!
படகோட்டியின் மகன்
பாரத முதல் குடிமகனான வரலாறு!

செய்தித்தாள்களைச் சுமந்தவனைச்
செய்திதாள்கள் சுமக்கும் கதை!
நாசாவுக்குச் சவால் விட்ட
நம் வீட்டின் நாயகன்!

இளைஞர்களின் எண்ணங்களை
அடைகாக்கும் அக்னிக் குஞ்சு!
இளைஞர்களின் மனதில் புகைகிறது-நீர்
பொக்ரானில் வெடித்தது!

இல்லறம் துறந்து இளைஞர்களின் இதயத்தில்
நல்லறம் புரியும் நாயகன்!
உம்மை உயர்த்தியது-உங்கள் ஆசான்
நீர்-இன்று உலகுக்கெல்லாம் ஆசான்

அன்று-நேதாஜியின் இந்திய தேசியப்படை
பாரத விடுதலைக்கு!
இன்று-கலாமின் இந்திய வளர்ச்சிப்படை
பாரத வெற்றிக்கு!

இந்திய வளர்ச்சிக்காய்
எரிந்து கொண்டிருக்கிறது ஓர் எழுச்சி தீபம்!
பாரத வெற்றிக்காக-இதோ
மண்ணில் ஓர் பகலவன்

அய்யா...! கடற்கரையில் நீர் கண்ட கனவு
கரையேற்றியிருக்கிறது இளைய சமுதாயத்தைக்
கற்றுக் கொண்டோம் நாங்களும் கனவு காண...!

*வசந்தராஜா*

## மனே

ஊரைவிட்டு
வெளியேறிய அகதி
ஊரை ஓர்முறை
திரும்பிப் பார்த்தான்
ஊருக்குள் செல்ல
வழி சொல்லிக் கொண்டிருந்தது
எல்லையில் நின்றிருந்த
கைகாட்டி மரம்.

## லைறக்கை

விரட்டுவோரையும் பார்த்துச் சிரித்தது
பிச்சைக்காரியின்
இடுப்பிலிருந்த குழந்தை.

## ஊருக்குப் போன வீடு

காற்றின்
கரம்படாத வருத்தத்தில்
சலனமின்றித்
தொங்கிக் கொண்டிருக்கும்
உள்ளே
திரைச் சீலை

தொட்டுப் பேச வழியில்லாமல்
தவித்துக் கொண்டிருக்கும்
வெளியில் காற்று.

*நிலா*

## பறத்தல்-அதன் சுதந்திரம்

முற்றத்தில் தினம் இறைக்கும் பிடியரிசியைப்
பசித்த நேரம் தேடிவரும் குருவிக் கும்பல்
தோட்டத்து மரங்களில் ஓயாத கிளிப்பேச்சு
விருந்துக்கோ-தன் வயிற்றுக்கோ
அவ்வப்போது அடுக்களைச் சன்னலில்
கரையும் காகங்கள்
மரங்களிலும் தரையிலும்
ஓடியபடியிருக்கும் அணில் கூட்டம்
விரிந்த மரப்பட்டைகளை-தன் அலகால்
குத்திக் குதறிக் கூச்சலிடும் மரங்கொத்திகள்
அத்தனையும் தாண்டிய புதுவரவாய்-
ரசனைமிகுதியில் குழந்தைகளின் பரிசாய்
கூண்டிலடைத்த இணை குருவிகள்...

கூண்டுக் கதவை அடிக்கடி
அலகுக் கையால் திறக்க எத்தனிப்பு
முதன்முதல் பள்ளி சென்ற பிள்ளை
வீடுவேண்டிக்
கதவருகே காத்திருக்கும் தவிப்பு
உடல் நடுங்க-
மணிக் கண்கள் மூடித்திறக்க-
இருந்த இடம் அசையாமல்
விரல்களை இறுக்கிநிற்கும்
இந்தக் குருவிகளுக்கு வேண்டியது
கூண்டுத் திறப்போ...

துளியூண்டு வயிற்றுக்காகத்
திரிந்து பறந்து தேட வேண்டாம் இரையை
கூடுகட்டும் சிரமமில்லை
மழைநாளில் சிறகு நனைந்து
நடுங்கிக் கிடக்க வேண்டாம்
பூனையோ காக்கையோ
பிடித்துண்ணும் பயமில்லை
குருவிக்காரப் பாவி குறிபார்த்து
சுட முடியாது....
எத்தனை சமாதானம் சொன்னாலும்
நிரடலாய்த் தான் இருக்கு
கூண்டில் அடைத்து-அதன்
சிறகுகளை முடக்கிப்போட

*வெ. சுபகாந்தன்*

## சமூகம் எனும் மனப்பிரபஞ்சம்

சமூகம்- மனிதர்கள் என்னும்
மனப்புள்ளிகள் மினுங்கிடும் மனப் பிரபஞ்சம்-
ஆண்மையாகிய ஆக்க சக்தியும்
பெண்மையாகிய பேணும் சக்தியும்
பகல், இரவு எனச் சுற்றிச் சுழலும் பூமியாம்-
பகுத்தறிவும் தொகுத்தறிவும் சங்கமித்த
பூரண ஞானமே ஆதவனாம்-
பேணும் பெண்மையினுள்ளே
குளிர்நிலவாய்ப் பொழிவது மனதாம்-
மனிதம் என்பது இந்த மனம்தானே-
கூட்டு மனமே முழுநிலவாம்-
புயலாயும் தென்றலாயும்
மாறுமுகம் காட்டும் காற்றே
உழைப்பாம், கல்வியாம்-
விழியும் செவியும் கலைகளாம்-
மரண ஒடுக்கம் சமுத்திரங்களாம்-
உயிர் ஜனனம் நதி மூலங்களாம்-
வாழ்வே நதிகளாம்-
ஒவ்வொரு மனிதரும் தாரகைகளாம்-
சிந்தனைப் புள்ளிகளெனத் துடிக்கும் தாரகைகளாம்-
கனவுகளும் கற்பனைகளும் பஞ்சு மேகங்களாம்
பிரக்ஞையே பேரண்ட வெளியாம்-
அஃறிணை உயிர்கள் கோள்கள் போல்வன
ஒவ்வொரு பிறப்பும் பெருவெடிப்பு (BIGBANG)
ஒவ்வொரு மறைவும் கருந்துளை நுழைவு (BLACKHOLE)

அ. ராஜன் பொன்ராஜ்

## இருளின் கருவறையினுள்

காற்றின் சிறுபாடல்
கருங்குயிலின் இதழ் தேடிக்
கானகம் முழுக்க கிளை விரிக்கிறது.

கருவண்டின் மடிதனில்
பட்டுரோமங்களைக் கிளறி
மகரந்தங்களைச் சேகரிக்கின்றன
மலரினங்கள்.

காலடியை ஸ்பரிசிக்கும்
சருகுகளின் சம்பாசணையைக்
கலைத்துப் போடுகிறது
தலைக்கு மேல் கடந்து செல்லும்
காக்கையின் சிறகசைப்பு.

உதிர்ந்திட்ட இலை குறித்தான ஆற்றாமையை
மௌனமாய்த் தீற்றித் தீர்க்கின்றன கிளைகள்
காற்றின் சுவர்களில்

பச்சை மழலையின்
மலரா உள்ளங்கையினுள்
அறுபடாமலிருக்கும்
தாயின் கதகதப்பை நாடிச்
சுருள்கிறேன்
இருளின் கருவறையினுள்.

*இரா. வெள்ளியங்கிரி*

## நட்பு இலக்கணம்

சுயநல அணைக்குள்
சுருங்கி விடாமல்-நட்பு
நதியாக நடக்கட்டும்
அணைகளை உடையுங்கள்

பாக்கெட்டைப் பார்த்து விட்டுப்
பழகுகின்ற நட்பிடத்தில்
செலவு ஆகிடாமல்
சிக்கனமாய்ப் பழகுங்கள்

கையோடு கைபிடித்துக்
கை குலுக்கிப் போன பின்பு
விரலோடு மோதிரங்கள்
இருக்கா என்று பாருங்கள்

ரோஜா மொட்டுக்களாய்
மலருகின்ற நட்புக்குள்
முட்கள் இல்லாத
முகங்களாய்த் தேடுங்கள்

கற்புள்ள நட்புக்குக்
கடுகளவு துன்பமென்றால்
கண்ணீர் துடைப்பதற்குக்
கைவிரலை நீட்டுங்கள்

வானத்து நிலவாக
வசதியிலே உயர்ந்தாலும்
தேயாத நட்பு என்றால்-அதைத்
தெய்வமென்று சொல்லுங்கள்.

*தி. மனோகர்*

## கேளீர்

கேளாய் இளைஞர் கூட்டங்களே-இரு
    கைகள் இருக்கப் பயமெதற்கு
நாளை என்பது வெறுங்கனவு-நீ
    இன்றே இறக்கை விரித்திடுவாய்
பாலை வனமும் பூப்பூக்கும்-உன்
    பார்வை உறுதி கொண்டாலே
நீல இரவும் ஒளிவீசும்-நீ
    நெஞ்சை நிமிர்த்தி நின்றாலே.

தாயே உலகின் முதல்தெய்வம்-நல்
    தந்தை உனக்குத் தோழனடா
நோயே உயிர்க்குப் பெருந்துன்பம்-அதை
    நெருங்க விடாமல் காத்திடுவாய்
உண்மை மனிதர்க்கு அழகாகும்-நல்
    ஒழுக்கம் உன்னை மேலுயர்த்தும்
வன்மை யில்லா மனம்கொள்வாய்-நெஞ்சில்
    நேயம் வளர்த்திட வேண்டுமடா

புறப்படு தோழா தோளுயர்த்தி-முன்னே
    புதுயுகம் தெரியுது கண்விழிப்பாய்
திறம்பட உழைத்திடு; எத்தொழிலும்-உமக்கு
    இழிவில்லை என்பதை எண்ணிடுவாய்
பிறப்பொடு பிறந்தது மொழியுணர்வு-இதைப்
    பழிப்பவர் தம்மை அடக்கிடுவாய்
இறந்தபின் உன்பெயர் மண்ணுலகில்-என்றும்
    இறவாமல் புகழ்பெற வாழ்ந்திடுவாய்.

*கி. இராமசாமி*

**பேரின்பம்..**

அன்றாடம் வாழ்க்கையிலே
ஆயிரம் சந்திப்பு...
என்றாலும் இன்தமிழ்தான்
எனக்கென்றும் தித்திப்பு!

அம்மா என்றழைத்து
அறிமுகம் ஆனதமிழ்
தெம்மாங்காய் எனைத்தழுவும்...
தென்றலாய் எனை வருடும்!

நித்தமும் எனக்கமுதம்
நெஞ்சினிக்க ஊட்டிவிடும்
முத்தமிழின் சந்திப்பால்
முதுமையென்னை விட்டுவிடும்!

ஆத்திச் சூடியிலே
அறநெறியை ஊட்டியது!
ஐம்பெருங் காப்பியத்தில்
அருஞ்சுவையைக் காட்டியது!

வள்ளுவத்தின் சந்திப்பால்
உள்ளம் மிகத் தெளிந்தேன்
கள்வடிக்கும் கம்பனது
கவிதையிலே நான்தொலைந்தேன்!

தித்திக்கும் தேன்தமிழைத்
தீண்டுவதே எனக்கின்பம்!
முத்தமிழாம் கடலினிலே
மூழ்குவதே பேரின்பம்!

ப. ஜீவகாருண்யன்

## பிறவிப்பயன்

மேயவந்த ஆட்டிடம்
ரோஜா கெஞ்சிற்று
கொஞ்சம் பொறு
என்னை ஒரு கவிஞன்
பார்க்கும் வரை
அல்லது
யாரேனும் மனிதர்
தீண்டும் வரை.

## முகம் அறியாதவன்

தனது வீடு
தீப்பிடித்த
தகவல் அறியாமல்
குழப்பத்தில் கிடந்த
மனிதருக்கு
நேற்று நடந்ததைத்
நாளை
நடக்க இருப்பதை
தெளிவாக விவரித்தான்
குறிசொல்லி.

### பத்மபாரதி

## யதார்த்தம்

நான் அப்படி...
பேசியிருக்கக் கூடாதோ?
இமை மூடிக்கிடந்தாலும்-
மனம் விழித்துக் கொள்கிறதே!
என்ன செய்ய?

நண்பர்களின் நடுவே...
நான் மட்டும் அந்நியமாதல் ஏன்?
கலகலப்பான உரையாடல்களிடையே
மௌனம் காத்தல்...
எனக்கான சாபமா?
இருப்பினும்-
எனக்கான சொற்களை என்னால்...
உதாசீனப்படுத்த இயலாது!

அவர்களை விட.
அதிகமாகவும் பேசிடவில்லை...
ஆனால்-அதில்...
ஆன்மா காயம்பட்டதெனில்-
அர்த்தமேயில்லை!

பழகிவிட்ட- தோழமையுணர்வால்...
வயதை மறந்து சற்று
வம்பாடினேன்தான்! ஆனாலும்...
வரம்பு மீறவில்லை!
இருந்தும்-
மற்றவர்களுக்குச் சொல்லாத...
அறிவுரை-
எனக்கு மட்டும் எனில் எப்படி?
அது-என்...
வளர்ச்சிக்கான அவரின் ஆர்வமா?
அல்லது-
ஏற்றுக்கொள்வேன் எனும்-
எதிர்பார்ப்பா?
ஆனால்-
ஒன்று மட்டும் எனக்குப் புரிந்தாயிற்று!
யதார்த்தத்தை விட...
வாழ்க்கையில்-
நடிப்புக்கும்...
நல்ல மரியாதை உண்டென்று!

*எஸ். நடராஜன்*

## இன முழக்கம்

ஊர் முழுக்க இன்னும்
முழங்கிக் கொண்டுதானிருக்கிறது
வீரம் பூசிய பேச்சுகள்
நரம்புகளை முறுக்கி
இரத்தத்தைச் சூடேற்றும் வார்த்தைகள்
அதில் நிறைய இருக்கும்.
அப்படிதான் உன் பாட்டன்
அதைக் கேட்டுப் பித்தம் தலையேறி
அன்று கத்தியைக் கையில் எடுத்தான்.
அறுத்த தலை எரிப்பதற்குள்ளேயே
அவர் தலையும் மண்ணில் உருண்டது.
அன்று ஆடிய ஆட்டத்தின் விளைவாய்
உன் தந்தையும் என் தந்தையும்
அலுமினியத் தட்டுக்களோடு
வெவ்வேறு சிறைகளில்
இன்று உன் கையிலும் என் கையிலும்
இப்போதிருப்பதும் அதே கத்தி.
நம்மிடமும் துருவேறிய அதே மூளை.
கத்திக்கு கத்தி
துப்பாக்கிக்கு துப்பாக்கி
தலைக்குத் தலை-என விஷமிகளின்
உணர்ச்சித் தூண்டும் பேச்சுகள்
இப்போதும் குறைந்தபாடில்லை.
பின் உல்லாசமாய்ப் பிழைப்பு நடத்த
அவர்கள் கட்டும் வீட்டிற்கு
நம் சாம்பல்தானே செங்கற்கள்.
ஆகவே நாம் அனைவரும் ஒன்றாய்த் திரண்டு
மூடராய் ஒருவருக்கொருவர் வெட்டிச் சாவோம்.
விஷமிகள் இன்னும் வேர் பரப்ப
அவர்களின் பிழைப்பு
நம்மால் ஏன் மண்ணாக வேண்டும்?

# வண்ண மின்னல்

## பிரிவு

பெரிய சாவு
ஊரில் முக்கியப் பிரமுகர்
மாரடைப்பால் மரணம் என்றதும்
மக்களின் சோக அலை
ஆர்ப்பரித்து எழுகிறது
சுற்றமும் நட்பும் சூழ வந்திருந்து
துக்கம் விசாரித்துத் திரும்பின
மனைவி தளர்ந்துபோய்ச் சாய்ந்திருக்கிறாள்.
தொண்டை கம்மிய நிலையில்
அழுதாலும் கண்ணீர் வராத நிலை
உரிமைச் சோறு சாப்பிட்டு விட்டு
இல்லம் திரும்பிய பங்காளிகள்
ஜீவனற்ற அமைதியான சூழ்நிலையில்
இன்னும் வாசலின் ஓரத்தில்
அவரது வரவை எதிர்பார்த்து காத்திருக்கும்
ஜோடி செருப்புகள்...

*தாய்.ராசி. ஜெகதீஸ்வரன்*

## பதிலின்றித் தவிக்கிறேன் நான்

நீர்கோத்த
ஈரவிழிகளின் வழியே
கசிகிறது உன் வார்த்தைகள்
சப்தமின்றிக்
கிழிந்த சட்டையைப்
பழைய நூலில் தைத்து
வெளித்தெரியாமல் மூட முயல்கிறாய்
உன் வறுமையை

டைகட்டி, ஷூ போட்டு
ஆட்டோவில் போகும்
உன்வயதுப் பிள்ளைகளை
வெறித்துப் பார்க்கும்
உன் மனதின் கேள்விகளுக்குப்
பதிலளிப்பது யார்?

கம்ப்யூட்டரில் விளையாடிக் கொண்டிருக்கும்
பிள்ளைகளை-
கதவோரம் நின்று எட்டிப்பார்த்து விட்டுக்
கடந்து போகிறாய்

சுடசுட அம்மா ஊட்டிவிட
டிபன் சாப்பிட்டுவிட்டு ஓடும் பிள்ளைகளை
ஏக்கத்தோடு பார்த்துவிட்டு
உன் பாத்திரத்தைத் திறந்து பார்க்கிறாய்-
அதில் ஆறிய பழங்கஞ்சு-

மாலை நேரங்களில்
நாட்டியம் கற்றுக் கொள்ளும்
பிள்ளைகளின் ஆட்டத்தைப் பார்த்துவிட்டு
யாருமில்லாத முந்திரி மரங்களின்
நடுவே-வியர்வை வழிய

தன்னந்தனியனாய்-நீ
ஆடிக் கொண்டிருப்பதைப்
பார்த்து ரசிக்கிறது- வானம்

மகனே
அரசு ஆரம்பப்பள்ளியில்
முதல் மதிப்பெண் பெறும்
மாணவனாக இருந்தாய் நீ

உன் அம்மா இறந்ததும்
உன் பள்ளிப்படிப்பு
விடுப்பெடுத்துக் கொண்டது
நான் உன் சித்தியை
மணம் செய்திருக்க கூடாது.
பாடபுத்தகங்களுக்கு மத்தியில்
வாழ்ந்திருக்க வேண்டியவன்- நீ
இப்போது ஆடுகளை மேய்ப்பவனாக
ஆகிப்போனாய்

பள்ளிக் கூடத்திற்குப் போகும்
பிள்ளைகளைப் பார்த்து ஏங்கும்
உன் விழி நீருக்குப்
பதிலின்றித் தவிக்கிறேன் நான்.

ஏசுவும், கிருஷ்ணரும்
ஆடுமாடு மேய்த்தவர்களாம்
நியூட்டன் கூட -மாடு மேய்த்தாராம்
ஷேக்ஸ்பியர்- குதிரைலாயத்தில்
வேலை செய்தவராம்.
மகனே
ஒருநாள் நீயும் கூட
இவர்களைப் போலப்
பெரியவர்களாக ஆகக்கூடும்
என் போன்ற கையாலாகாத
தந்தைகள் வேறென்னதான்
செய்யமுடியும்-
இப்படி கனவு காண்பதைத் தவிர.

*ஆர். வேல்முருகன்*

**பெண்ணின் பெருமை**

அலுவலகங்களில் OT பார்த்தால்
ஆபத்து என எண்ணிய பெண்கள்
ஆகாய விமானத்தை ஓட்டுகிற
அளவிற்கு ஆளுமை பெற்றுள்ளது
அசுர வளர்ச்சி அன்றோ

தண்ணீர்க்குடம் தூக்கியவர்கள்
எண்ணெய் நிறுவனங்களில்
எரிபொருள் நிரப்பும் அளவிற்கு
முன்னிலை வகிப்பது
முக்கிய வளர்ச்சியன்றோ

ஆகாது என்பதையும் ஆக்கி வைத்து
அனைத்துக்கும் ஆதாரமாக அமைந்து
போதாத காலமய்யா பொறந்ததும்
பெண்ணாயிடுச்சே என
வேதனைபட்டோர்க்கெல்லாம்
விடிவெள்ளியாகத் தோன்றிப்

படிப்படியாக உயர்ந்து
அடிப்படைத் தேவைகளைத்
துடிப்புடன் நிறைவேற்றும்
துணிவுடன் இன்று
பல்வேறு துறைகளிலும்
பதிவினைத் தான்செய்து பாராட்டும்
விதமாக
முத்திரை பதித்துப் பலர்
முகத்திரைகளைக் கிழித்து

பெண்ணால் முடியும் இனி
என்னால் முடியுமென
விண்ணுலகம் வரை சென்று
வியத்தகு சாதனைகளைப்
பெண்ணுலகம் கண்டுள்ளதை
எண்ணுகிற வேளையிலே

அன்புக்கு வாழனும் பெண்ணோடு
அவளுக்கு ஆதரவாய்
ஆண்களும் இருக்கலாம்
அவள் பின்னோடு

வாழ்க வாழ்க
பெண்ணினம் என்று
வாழ்த்துகள் அளிக்கனும்
ஆணினம் இன்று.

*கு. பிரேமலதா*

## உன் குறும்புகள்

நட்சத்திர நண்பர்களை
நினைத்துக் கொண்டிருப்பாயோ
பகல் உறக்கத்தில்

அவை உனக்குப் பயந்து போய்
மறைந்து கொள்கின்றன
வானத்தில்.

எனக்குத் தெரியும்
அவற்றையும் பிடித்து வந்து
விளையாடி அடித்துவிடுவாய்

வலி தாங்காமல்தான் அவை
பகலில் வானத் தாயின் மடியில்
உறங்கி விடுகின்றன

குழந்தையே ...
குறும்புத் தனத்துக்கு
அளவே இல்லை உன்னிடம்
சேட்டைகளில் கூட
அகமகிழ வைக்கிறாய் மற்றவர்களை

இரவில் தூங்கும்பொழுது
உன்னுடன் விளையாட வருகின்றன
நட்சத்திரக் கூட்டங்கள்

உன் அன்போடு கூடிய முத்தத்தால்
அவற்றின் உள்ளம்
நனைந்திருக்கின்றன.

அன்புக்குழந்தாய்
நீ செய்யும் குறும்புகளைத்
தடுக்க முயல்கிறேன்
ஆனால்
நீ உறங்குகையிலும்
எனது தனிமைகளிலும்
உன் குறும்புகளை எண்ணியபடியே
விடிகிறது என் இரவுகள்.

சுசீலா சீனிவாசன்

## தாய்க் கிழவி

இளையமகன் இறந்தபின்பு
ஒண்டிக் கட்டையாய்
முடங்கிக் கிடந்தாள்
ஓட்டு வீட்டில் கிழவி மட்டும்!

எப்போது வருவானென்று
ஒவ்வொரு நாளும் காத்திருந்தாள்
பட்டணத்தில் குடியிருக்கும்
மூத்த மகன் வரவிற்காக...

பொக்கிசமாய்ப் பாதுகாத்த
குடும்பப் புகைப்படத்தைத்
தடவிப் பார்த்துக் கொள்வாள்!
மனத்துயரை ஆற்றிட...

பக்கத்துவீட்டுக் குழந்தைகள்
பாட்டியென்று அழைக்கும் போது
பாசத்தால் துடித்துப் போவாள்
பேரக்குழந்தைகள் எண்ணி...

குலதெய்வக் கோவிலுக்குக்
குடும்பத்தோடு பொங்கவச்சு
குலம்தழைக்க வேண்டினாள்
போன வருடம் இதே நாளில்!

வாசலிலே வந்து நிற்கும்
மூத்த மகனைக் கண்டதும்
தேக்கிவைத்த கண்ணீரைப்...
பாசத்தோடு கொட்டினாள்...

அய்யனார் சாமிக்கு
ஆட்டுக்கிடா வெட்டிப்
படையல் செய்து வேண்டினார்
பலரும் குடும்பத்தோடு!
குலம் தழைக்க வேண்டி
அய்யனார் சாமியிடம்
எப்படி வேண்டுவாள்
இனி தாய்க்கிழவி...!

கி. அன்பழகன்

## வழி தேடும் விழிகள்

அருவாளும் களகெட்டும்
வழிகாட்டும் என்றெண்ணி
அயராது உழைத்தாலும்
அரைவயிறு கஞ்சிக்கு
அடுப்படி ஏங்குது!

விலைவாசி ஏற்றத்துல
கூலிக் காசு பத்தாம
குழந்தை வயிறும்
தூங்குது!

வயசு வந்த அருக்காணி
எட்டாவது படிக்கிறா!
ஏங்கும் அவ மனம் நிறைய
கலெக்டர் ஆசை தீரல!

களக்கெட்டும் அருவாளும்
காட்டுமா வழி தெரியல!

அய்வேசு இடமின்னு
குடிசையை
அதிகாரி இடிக்கிறான்!
ஆனாலும்-
எம்பொண்ணுக்கு
கலெக்டர் ஆசை தீரல!

வழியைத் தேடி
விழிகள் இரண்டும்
கண்ணீரில் மறையுது!
வந்து பொறந்தது
உலகத்துல
வீணென்று புரியுது!

உயிரோடு வாழ்வதுவே
ஒசத்தின்னு தோணுது!
ஒசந்து போவ வழி தெரியாம
ஊமை விழிகள் ஏங்குது!

ஆனாலும்-
நம்பிக்கை மனதுக்குள்ள
இருக்குது!
அதை நெனச்சி
இந்த உடம்பு
தினம் தினமும்
உழைக்குது!

மு. அன்புமணி

## இன்பச் சிகரம்...!

விண்ணளந்த புவியிலொரு
  புது உலகமிது - இந்த
மண்ணிலே கிடைத்திடும்
  கருப்புத் தங்கமிது ;
வந்தோர்க்கு வாழ்வதரும்
  புது நகரமிது- பாரில்
வளர்ந்து வரும் நெய்வேலி
  இன்பச் சிகரமிது...!

முந்தைய நாட்களிலே
  முந்திரிக் காடுகளிது-இன்று
முக்கியத் தொழில்களின்
  முன்னேற்ற நகரமிது ;
இன்றைய நாட்களிலே
  நிலக்கரிச் சுரங்கமிது - இதில்
மின்சாரம் உண்டாக்கிடும்
  மின்னொளி நகரமிது...!

எண்ணற்ற கல்வி நிலையங்கள்
  கொண்ட நகரமிது - பற்பல
பயிற்சிகள் பயின்று தருகின்ற
  வளாக நகரமிது ;
கணக்கற்ற விளையாட்டுகளைச்
  சொல்லித் தரும் நகரமிது-இங்குக்
கண்ணுக்கினிய அழகிய சாலைகளின்
  எழில்மிகு நகரமிது...!

பணியாளர் தம்குடும்பத்திற்கும்
மருத்துவம் தரும் நகரமிது–அதில்
உயர்சிகிச்சை மருத்துவத்திற்கு
வெளியூர் அனுப்பும் நகரமிது;
பயன்பெறும் செய்தியுடன் அறிவுபெற
நல்நூலக நகரமிது–என்றும்
நிறுவனத்தில் கலாச்சரம் பெருகிக்
கலை வளர்க்கும் நகரமிது...!

பன்மொழி மக்கள் ஒற்றுமையுடன்
வாழும் ஒற்றுமை நகரமிது–அவர்
பணியெனக் கொண்டு பண்போடு
உழைக்கும் பண்பட்ட நகரமிது;
பாங்குடனே பலர் படைக்கும்
பற்பல சாதனை நகரமிது–என்றும்
தன்னிகரற்று விளங்கி வரும்
நெய்வேலி பொன்விழாச் சிகரமிது...!

*செ. இலிங்கானந்தபாரதி*

## சமூகம் பேசுகிறேன்

இராணுவ வீரனே
எல்லையில்
யாருக்காகக் காவல்....?

இங்கே
அரசியல் வாதிகள்
ஒன்றியம் ஊராட்சி
கிளை பேரூராட்சி
வட்டம் மாவட்டம்
என்று பிரித்துக் கொண்டார்கள்.

மொழியால் வழியால்
மதத்தால் சாதியால்
இனத்தால் இடத்தால்
மக்கள் பிரிந்து கிடக்கிறார்கள்.
கட்சி சங்கம்
மன்றம் மார்க்கம்
மையம் இயக்கம்
என்று தனித்துக் கிடக்கிறார்கள்.

கடவுள் தத்துவம்
நாத்திகம் ஆத்திகம்
முற்போக்கு பிற்போக்கு
என்று எதிர்த்துக் கொள்கிறார்கள்.

பணத்தால் படையால்
பலத்தால் பதவியால்
வசதியால் திறத்தால்
மோதிக் கொள்கிறார்கள்.

முதலாளி தொழிலாளி
உழைப்பாளி பிழைப்பாளி
விவசாயி வியாபாரி
என்று கலைந்து போகிறார்கள்

பண்பாடு கலாச்சாரம்
விதிமுறை நீதிவழி
காவல் கட்டுப்பாடு
எல்லாம் மீறப்படுகிறது.

குண்டர்கள் தடியர்கள்
அடியாட்கள் கூலிப்படையினர்
தாதாக்கள் வன்முறையாளர்கள்
மலிந்து விட்டார்கள்.

ஏழ்மை வறுமை
பஞ்சம் பட்டினி
கல்லாமை இல்லாமை
மிளிர்கிறது எஸ் கே ஒளிர்வது-

பொதுவுடமை
தனியுடமையாகிறது.
தொலைவில் இருக்கும்
அந்நியர்களை விட
அருகில் இருக்கும்
அந்நியத்தை விரட்டத்
துப்பாக்கி முனையை
ஒருமுறை உன்நாட்டிலும் திருப்பு
சுடுவதற்கு அல்ல
ஒன்று
படுவதற்கு.

இ. ஜோசப் அந்தோணிராஜ்

## வாழ்க பாரதம்! வாழ்கவே!

பயணம் தொடரும்
தொடர் வண்டிப்பாதையாகத் தண்டவாளம்...
இருகோடுகளாக, நெடுக்காக,
வெகு தொலைவுப் பயணமாய்த் தொடரும்...

ஊர்களை, மக்களை, மாநிலங்களைச்
சந்திக்கும் சந்திப்புகள்... தண்டவாளங்கள்!

பல துண்டுத் தண்டவாளங்களை
இணைப்பது- குறுக்குச் சிமெண்ட் துண்டுகளும்,
போல்ட்டுகளும், நட்டுகளும்,
கம்பிகள் மட்டும்தானா?
பல்வேறு மாநிலங்களைக் கடந்து செல்லும்.
இந்தத் தண்டவாளங்களின் பாதைகளைக் கூட...

குண்டு வைத்துத் தகர்த்தும்,
தொடர்வண்டிப் பெட்டிகளுடன்
மக்களையும் அழிப்பது...
மொழியின் வேற்றுமையா?
இல்லை. இன வேற்றுமையா?

இல்லை... இல்லை...
தண்டவாளங்கள் தேசத்தை இணைக்கும்
"இரு கோடுகள்" இணைப்புச் சட்டங்களும்தான்!

மக்களின் மொழி வேற்றுமை மறந்து,
தேசியத்தால், நிறம், சாதி, கட்சிகள் மறந்து....
பஞ்ச நதிகள் மகிழ்ச்சியாய்ப் பாய்ந்து செல்வது போல்...

தேசிய நதிகள் இணைய வேண்டும்...!
தேசிய நதிகள் இணைய வேண்டும்...!!
இனியாவது... நம் கைகள்
அன்பினால் ஒன்றாய் இணையட்டும்!
வாழ்க பாரதம்! வாழ்க வாழ்கவே!!

*தரிசனப்பிரியன்*

## மலரினும் மெல்லிய...

தோட்டத்தில் அமர்ந்து
உன்னை
ஓவியமாகத் தீட்டிக் கொண்டிருந்தேன்
அது,
முழுமை பெறாமல்
பாதியிலேயே நிற்கிறது...
என்ன செய்ய...!
சாயம் தொட்டுக் கொண்ட
வண்ணத்துப்பூச்சி
பறந்து போய்விட்டதே...!

*தேன்தமிழன்*

## எனக்குள் நான்...!

என்னுள் இறங்கி
என்மனக் குகையை
அகழ்ந்து பார்க்கிறேன்!

பிரபஞ்சம்
பஞ்சபூதங்களால் ஆனது!
வாழ்வோ ஐம்புலன்களால்
ஆட்டி வைக்கப்படுவது!

புலன்களில் மனம் சஞ்சரித்தால்
வாழ்வு பூஞ்சோலையாகிறது
மனதைப் புலன்கள் ஆட்சி செய்தால்
அதுவே முட்காடாகிறது

வாழ்க்கைப் பாதையில்
வலம் வந்த வேளை
ஏற்பட்ட இடர்கள் எத்தனை எத்தனை!

நட்பு எனும் கற்கள் இடறின
காயம்பட்டது காலில்!
சொந்தம் எனும் முட்கள் குத்தின
இரத்தம் வழிந்தது மனதில்!

அவை சில
இற்றுப் போனதால்
இன்னும் வலிதான்!

சுகம் என்பது சொத்திலும் இல்லை;
சொந்தத்திலும் இல்லை!

வந்த வழியும் வாழ்கின்ற வகையும்
நன்றாய் இருந்தால் நாளும் சுகம்தான்!

உங்களுக்குத் தெரியுமா
எனக்கு சிறகுகள் இருந்தன

நான் விரும்பிய இடங்களுக்கு
பறந்துச் செல்வதற்கும்
வானில் விரும்பும் உயரத்தில்
சென்று வருவதற்குமாக
எனக்கு சிறகுகள் இருந்தன

நான் என் குடும்பத்தாரோடு
குழந்தைக் குட்டிகளோடு
சுகமாய்ப் பறந்து திரிந்த போதும்
சிறகுகள் இருந்தன

இறுதியாய்
மனிதர்களின் கண்களில்
படும் முன்பு வரைக்கூட
சிறகுகள் இருந்தன

மனிதர்கள்
இரண்டு விதமானர்வர்கள்
சிலர்
சுட்டுத் தின்று விடுபவர்கள்
சிலர்
கூண்டில் அடைத்து வைத்து
அழகுபார்ப்பவர்கள்.

- தாய். ராசி. ஜெகதீஸ்வரன்